# புட்ப விதியும், புட்ப பலனும்.



ரிப்பன் பிரஸ், சென்னை.

விலை அணா-2.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

---

# புட்பவிதியும்
# புட்பபலனும்.

---

இவை

மகாவித்வான்

காஞ்சிபுரம்-இராமசாமிநாயுடு அவர்களால்

பார்வையிடப்பட்டு,

---

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டன.

---

1906.

விலை அணா-2.

உ

கணபதி துணை.

திருவாரூர்
ஞானப்பிரகாசபட்டாரகர்
அருளிச்செய்த

# புட்பவிதி.



விநாயகர்காப்பு.

பாமாலை சூடும் பரமற்கு நாயடியேன்
பூமாலை பாடிப் புனைகின்றேன்—மாமாது
வேதத் தலைமருள் வேழத்தின் பாதமலர்
போதத் தலைமேற் புனைந்து.

சிவஸ்துதி.

பொன்பூத்த நறவிகழி புரிசடைமேற் புனைந்து
புனலறுகு வெள்ளெருக்கம் பூச்சூடி நளின
மின்பூத்த கருங்குவளை பசுங்குமிழ் செங்காந்தள்
வெண்முல்லை யரக்காம்ப லிடப்பாகம் பூத்து
முன்பூத்த புண்டரிகம் வெண்டாள மிரண்டு
முகமலர விமையவர்க ளகமலர முகுந்தன்
றன்பூத்த திருவுந்தி யயன்பரவக் கனக
சபையினட மிடுகடவுள் சரணமலர் சரணம்.

கோட்டுப்பூவகை.

வன்னி பலாவெலுமிச்சை நாரத்தை கோங்கு
மந்தாரை யூமத்தை மாவிலிங்கை நொச்சி

பன்னியகில் சந்துமகிழ் மாதுளைமா வசோகு
பாதிரிவெள் ளெருக்கிலந்தை பலாசுநுணா நறவம்
புன்னைவிளா மருதுகொன்றை நெல்லிகுராச் செருந்தி
பொன்னினு விரைகிளுவை குருந்துவில்வ நாவல்
மன்னுதாதகி குளஞ்சி யலரி வெட்சிபவள
மல்லிகை சண்பகஞாழல் கோட்டுப்பூ வகையே.(உ)

கொடிப்பூவகை. வேறு.

மருவாரும் காந்தள்காட்டு மல்லிகை முல்லைமௌவல்
கருவார்வெற் றிலையேதாளி கருமுகை கருங்காக்கொன்றை
முருகாரும் வெண்காக்கொன்றை குருக்கத்தி முதலாவுள்ள
விருவாட்சிகொகுடிபிச்சியிவையெலாங் கொடிப்பூவாமே.()

நீர்ப்பூவகை. வேறு.

செய்யதாமரை சேர்ந்தபொற்றாமரை
துய்யதாமரை சொல்லிரண்டுற்பல
மையசெம்மைய வெண்மையவாகிய
நெய்தன்மற்றிவை நீரின்மலர்களே. (ச)

நிலப்பூவகை. வேறு.

பட்டிநாயுருவிபூளை பச்சைசெவ்வந்திதும்பை
வெட்டிவேர்மருக்கொழுந்து கரந்தையே விஷ்ணுகாந்தி
மட்டவிழ்துழாய்செங்கீரை மத்தைசெம்பரத்தைவங்க
மிட்டகொக்கிறகனிச்சம் வலம்புரி யிவைநிலப்பூ. (ரு)

துளபமெடுக்கலாகாதநாள்.

இரவொடுகாலைமாலை யிரவியேவெள்ளிசெவ்வாய்
பரவுமட்டமியீராறு பதினான்குபர்வமோணம்

விரவிய மாதத்தாதி விதிபாதமபராணத்தின்
மருவியதுளபங்கொய்யின் மால்சிரங்கொய்தலொக்கும். (௬)

வில்வமெடுக்கலாகாத நாள். வேறு.

தவமுறு மாதமுன் சதுர்த்தி யட்டமி
நவமியே சதுர்த்தசி நவின்ற நல்லுவா
வவமறு சோமவா ரத்து மன்பர்கள்
சிவனருச் சனைசெயும் வில்வந் தீண்டிடார். (௭)

துளவமும் வில்வமு மிந்தனைமாதத்துக்காகு
மெனல். வேறு.

கூறு நாளி லெடுத்திடு கூவிள
மாறு மாதம்வைத் தர்ச்சனை செய்யலா
நாறும் வெள்ளி சிறந்த நறுந்துழா
யேறு மர்ச்சனை யீரா று திங்களே. (௮)

துளபத்துக்கும் வில்வத்துக்கும் புறனடை.

ஈரிலை கீழுற விருந்து பூத்திடுஞ்
சீரிய துழாய்மலர் தினமுங் கொய்யலா
மூரிடும் புழுக்கடி யொன்று மேயலாற்
பாரினி லவையெலாம் பழுதில் வில்வமே. (௯)

இன்ன இன்ன பத்திர புஷ்பங்களிலே நிர்மாலியமு
மாகுமெனல்.

செழித்திடுந் துளபமுஞ் சிறந்த வில்வமும்
வழுத்துபொன் மத்தமு மலரு நீலமு
மழுத்துசெம் பொன்மல ரதனைப் போலவே
கழித்தநிர் மாலியங் கழுவிச் சாத்தலாம். (௧௦)

இத்தனைநாளிம்மலராகுமெனல்.

அம்புய மேழுநா ளலரி மூன்றுநாள்
வம்பவிழ் குடலையில் வைத்துச் சாத்தலா
நம்பிடு நறுமலர் நண்ணி டாவிடிற்
றம்பழுப் பரும்பிலை தளிருஞ் சாத்தலாம். (கக)

உத்தம மத்திம அதமமலர்கள்.

உத்தமந் தனக்கென வுற்ற நந்தனம்
மத்திமங் காட்டினின் மலர்ந்த பூவெலா
மித்தலத் தொருவன்வைத் திட்ட சூழலி
லத்தனை மலர்களு மதம மாகுமே. (கஉ)

இம்மலர்களிழிபெனல். வேறு.

எடுத்துவைத்தே யலர்ந்த மலர்பழம் பூக்கண்மற்ற
வெருக்கிலை யாமணக்கிலையினிற் பொதிந்தபூக்க
ளுடுத்தபுடைவை யிற்கரத்தி னமைத்த நறும்பூக்க
ளுதிர்ந்திடு பூவரையின் கீழுற்றவிரைப்பூக்க
ளடுத்த புழுக்கடி யெச்சஞ்சிலந்தி மயிருறுத
லங்கையில்வைத் தங்கைகுவித் திடுதல்கங்குறனிலே
யெடுத்தமலர் நீரமிழ்த்தல் புறங்காட்டி லெய்த
லெச்சில்குளியா தெடுத்தலிழி பெனுமாகமமே. (கங)

வாரபுட்பம். வேறு.

பங்கய மலர்ந்தவெள் ளாம்பல் பாசடைச்
செங்கழு நீர்மலர் தகரச் செம்மலர்
தங்கிய குவலயந் தனைவெண் டாமரை
மங்கைகே ணீலமேழ் வார புட்பமே. (கச)

### வாரபத்திரம்.

சூரியன் வில்வமே துளசி திங்களே
யாரலில் விளாவிலை யறிவன் மாதுளை
வேரிநா யுருவிபொன் வெள்ளி நாவலை
காரியாஞ் சனியினில் விஷ்ணு காந்தியே. (கரு)

### பஞ்சவில்வம்.

மெச்சியேயடியவர் வியந்துசாத்திடு
நொச்சியேநறுவிளா நுவன்றகூவிளம்
வைச்சிடுங்கிளுவையே மாவிலிங்கையின்
பச்சிலையென்றிவை பஞ்சவில்வமே. (கசா)

### காலையிற்சாத்தும் அஷ்டபுட்பம்.

வம்பவிழலரிநா யுருவிமல்லிகை
வெம்பியவெருக்குடன் வில்வம்வெண்மலர்
நம்பியவடுக்கலர் நந்திநாண்மல
ரம்புயங்காலையி லஷ்டபுட்பமே. (கஎ)

### உச்சியிற்சாத்தும் அஷ்டபுட்பம். வேறு.

போதவிழ் பொன்னூமத்தை புலிநகக் கொன்றைவெள்ளைப்
பாதிரி வன்னிசெய்ய வழுதுணை படர்மந்தாரை
பேதமாய் மலரும்வெள்ளைக் காக்கொன்றை பெரியதும்பை
யோதிய விவைகளெட்டு முச்சியி லஷ்டபுட்பம். (கஅ)

### அந்தி அர்த்தயாம[illegible] அபராணங்களிற்சாத்தும் அஷ்டபுட்பம்.

வந்தமல்லிகையிரண்டுப[illegible]ழ்க[illegible]றமல்லிகைப்பூக்
கொந்துவேர்சண்பகப்பூ[illegible]றியசண்பகங்கொழுந்து

சிந்தை கூரஷ்டபுட்பஞ்சிவன்முடிக்கேறும்போழ்தி
லந்தியோடர்த்தயாமமபராணந்தனினுமாமே. (௧௯)

புலரிமுதலியகாலமெல்லாவற்றிற்குமுரிய
அஷ்டபுட்பம்.

இலகியபுன்னை வெள்ளெருக்குச் சண்பக
நிலவிய வலம்புரி நீலம்பாதிரி
யலரி செந்தாமரை யஷ்டபுட்பமாம்
புலரியம்போதொ டெப்பொழுதுஞ் சாத்தலாம். (௨௦)

மாதபுட்பம். வேறு.

மெத்திய பலாசுபுன்னை வெள்ளெருக்கலரிப்போது
கொத்தலர் சண்பகப்பூக் கொன்றையே தும்பைசெய்ய
கத்தரி பட்டிகஞ்சங் காவிமல்லிகை யீராறுஞ்
சித்திரைமுதலாக் கொள்கசிறந்திடு மாதபுட்பம். (௨௧)

மாசவபிஷேகம். வேறு.

கொழுந்து சந்தனங் கூறிய முப்பழ
மழுந்துபால் சர்க்கரை பணியாரமே
தழைந்தவன் னந்தழ னெய்யொழுகுதேன்
விழைந்தநெய் பொதிகம்பளம் வெண்டயிர். (௨௨)

கேதாரநாதர்க்குரிய பத்திரபுட்பம்.

வில்வமருச் சூதமத்த மாதுளையே நொச்சி
மேவிய முள்ளிலந்தை நறுங்கரந்தை செழுவென்னி
சொல்லிய கத்தரி நெல்லி சண்பகமே சாதி
தும்பையொடு மருதுமா மந்தாரமலரி

யெல்லவரும் புகழுமந்த விஷ்ணுகாந்தி
யெழிற்றேவ தாருவுட னெருக்கறுகென் றுரைக்கு
நல்லனவாம் பத்திரங்க ளிருபத்தொன்று
நாடரிய கேதாரநாதனுக் கர்ச்சனையே. (உங)

விநாயகசதுர்த்திக்குரிய பத்திரபுட்பம்.

மேதகுமா சிப்பச்சை நறுங்கையாந்தகரை
வில்வமுட னூமத்தை நொச்சிநாயுருவி
யேதமில் கத்தரிவன்னிய லரிகாட்டாத்தி
யெருக்குமரு துடன்மால் பேரியம்புகாந்தி
மாதுளைபே யுயர்தேவ தாருமருநெல்லி
மன்னுசிறு சண்பகமே கெந்தளிபாதிரியே
யோதரிய வறுகிவையோ ரிருபத்தொன்று
முயர்விநாயக சதுர்த்திக் குரைத்திடு பத்திரமே. (உச)

புஷ்பஞ்சாத்துமுறைமை. வேறு.

முறையுறு மஷ்டபுட்ப முதலிய சாத்தும்போதி
லிறைவனுக் கொருபூவேனு மெண்ணினிற் குறையலாகா
நிறைவுறப் புனைதல்வேண்டு நீண்மலர் கிடையாதாகிற்
குறைவறச் சொன்னபுட்பங் கூட்டியுங் கொள்ளலாமே. ()

இதுவுமது. வேறு.

நறைமலர்ப் பொகுட்டு நன்னுளம் போக்கியே
குறையுறக் குற்றமாங் குறைபடாவகை
நிறைவுறச் சாத்துக நீரின்போதெலாம்
புறவிதழ் போக்கினும் புனிதமென்பவே. (உசு)

இன்னமலரின்ன தேவர்க்காமெனல். வேறு.

வில்வமுடன் கொன்றைமலர் சங்கரற்கு நேயம்
மேவுமுகற் கறுகுவெட்சி கடம்புவிசா கனுக்காங்

குல்லைநெடு மாயவற்கா மலைமகட்கு நீலங்
கோகனதஞ் சூரியற்குத் திருமகட்கு நெய்தல்
வல்லகலை மடந்தைக்கு வெண்கமல நேயம்
வருங்கொடிய கடவுளர்க்குச் செம்மலர்கணையை
மல்லிமலர்க் கருங்குவளை யணைவருக்கு நேய
மம்மலரே யெம்மலர்க்கு மதிகமெனவுரைப்பார். (உஎ)

இன்னமலரின்ன தேவர்க்காகாதெனல். வேறு.

தும்பைமறையோர் தமக்காகா தூர்க்கைக் கறுகம்புல்லாகா
வெம்புகதிர் வானவன்றனக்கு வில்வமாகா விநாயகற்கு
வம்பார் துளபந்தானகா வடுகன்றனக்கு வலம்புரியு
மம்பைதனக்கு நெல்லியுமிங் காகாவென்ப ரறிந்தோரே. ()

விஷ்ணுவுக்காகுமலர்கள். வேறு.

மாதவி குருந்துவாகை மதயாணி கருங்காக்கொன்றை
சீதள மூருக்குச்செம்பட் டலரியே செம்பரத்தை
கேதகை கருந்துழாய் செந்திலகமுங்கே சவற்கா
நாதனுக்காகாவிந்த நறுமல ரலகைக்காமே. (உகூ)

திரிகால நிர்ணயம். வேறு.

காலையானது தாமதகாலமே
யேலுமுச்சி யிராசதகாலமே
மாலைநேரமும் வாழ்த்திடு யாமமுஞ்
சாலும் சைவகறைக் காலமுஞ் சாத்திகம். (௩0)

தமோகாலமலர்.

போதுளோதிய பொன்னிறப்பூவுடன்
சாதிநீலந் தவிர்ந்த சரியபூ

யாதுகேளிவை தாமதமாமல
ரோதுகாலையிற் சாத்துதலுத்தமம். (௩௧)

இராசதகாலமலர். வேறு.

செய்யதாமரைபலாசு செங்கழுநீர் பொன்மத்தை
செய்யமந்தாரைசெய்ய வழுதணை செய்யபட்டி
செய்யபாதிரியேசெய்ய புலிநகக் கொன்றையுச்சிச்
செய்திராசதப்பூவாகு மெழுந்தபட்டலரிப்பூவும். (௩௨)

சாத்திககாலமலர்.

வெள்ளைமந்தாரைபிச்சி வலம்புரிவெண்காக்கொன்றை
வெள்ளையம்புயமெருக்கு மல்லிகைவெள்ளிலோத்தி
வெள்ளலரியின்பூத்தாளி மிளிர்புன்னை மகிழ்செவ்வந்தி
தள்ளருந் தும்பைசாதி சாத்திக மலர்களாமே. (௩௩)

எல்லாமலருமாமெனல். வேறு.

கூறும்பூவிங்கிதுவென்று குறிப்பாருளரோ குவலயத்தி
னூறும்பூவுந் தேவருக்கா நாறும்பூவுந் தேவருக்காந்
தேறும்பூவையாகமத்திற் கரைகண்ட வரார்சிவன் முடிமே
லேறும்பூவாய் வனத்திலுள்ள வெல்லாப்பூவும் பயன்படுமால்

சிவபூசைசெய்தவைகள்.

குதிரைசிலந்தி கழுகுடும்பு குரங்குநரியீ யெறும்புசிதன்
மதுவண்டலவன் கரியரியா மஞ்ஞை யெகினம்புறுவாநந்த
ததியெண்காமை முயல்கோம்பி தத்தைகேழ லருச்சிப்ப
விதியும்விலக்குங்கடந்தாற்கு விதியாலொன்றைவிதிப்பாரார்.

வேடவடிவாய்ப் புலைச்சியிடும் வில்வம்புனைந்து சண்டாள, வேடஞ்சுமந்து சோமாசிவேள்வியகத்துவிடக்கேந்தி,

வேடன் சுட்டசுடுகாட்டு வெந்தசாம்பன் மிசைந்தார்க்கும், வேடனெச்சி னுகர்ந்தார்க்கும் விதிபாலொன்றை விதிப்பா ரார். (௩௬)

குன்றுமரம்புல்லி வைமுதலாக் கோப்பியும் புதாமுதலா, வன்றில் கழுகாந்தை கண்முதலா வரவுசிறு தேளிவை முதலாப், பன்றிகரடி யெலிமுதலாப் பரமற்குரிமைப் பயன் படலா,லின்றுமுதலா நாயடியே னெல்லாப் பிறப்பும் வேண் டுவனல். (௩௭)

இன்னமலரின்ன பாவத்தை நீக்குமெனல்.

எள்ளுநெடும் பிரமகத்தி தன்னைநீக்கு
மிதழிதா யரைக்கொன்ற வேதநீக்கும்
வெள்ளெருக்குப் பரதார வினைதணிக்கும்
வில்வமது பொய்புரைத்த வெம்மை நீக்குங்
கள்ளுணவு கோங்கம்பூப் புனையநீக்குங்
கத்தரியி னிலைபுனையக் குட்டநீக்கு
முள்ளியதெல் லாமெய்தும் வறுமைநீக்கு
மொண்டுமாய் மலர்களினு முயர்ச்சிதானே, (௩௮)

தும்பைமலர் கோகத்தி தோஷநீக்குஞ்
சொன்ன நயந்திடுகளவு பலாசுநீக்குந்
தம்பி தமையனைக்கோற லறுகுநீக்குஞ்
சாத்திடுஞ் சந்தனமகா தூக்கநீக்கு
மம்புவியி லிலிங்கபின்ன மசோகுநீக்கு
மடைந்தோர்தம் வறுமையெல்லா மான்பானீக்கும்
வம்பவிழ்நெய் நெல்லியிலை யுரோகநீக்கும்
வளர்நீலோற் பலநீக்கும் வாக்குத்தோஷம். (௩௯)

இன்னமலரின்னபோகத்தைத் தருமெனல்,

பாதிரியம் பிகைக்கணியி னில்லாளெய்தும்
பலாசமலரருச்சிக்கப் பணிகளுண்டாங்
கேதகையின் மலர்சாத்தச் சிவிகையெய்துங்
கிளர்முல்லை மலர்சாத்தக் கவிகையுண்டாந்
தாதுமாதுளைசாத்தத் தனங்களெய்துந்
தாமரையின்மலர்சாத்தப் பகைகணீங்கு
மேதகுநாரத்தையிலை வியந்துசாத்தில்
விரைத்தகரை சாத்தியிடிற் பசுவுண்டாமே. (சO)

செக்கமழு மெனுமிச்சைக் காடுபல்குஞ்
செங்கழுநீர் மலர்சாத்தப் புரவியெய்துங்
காக்கமழு மலர்சாத்தக் கமலைசேர்வாள்
கல்லாரமலர்சாத்தப் புதல்வர்ப்பேறு
மாக்கமழுநெய்தலுக்கர்த் தங்களுண்டா
மதுவபிடேகம் பண்ணிற் கீதமுண்டாம்
பாக்கியங்க ளத்தனையும் வேண்டுமென்னிற்
பரிமளமா மலரணைத்தும் பார்வதிக் கர்ச்சனையே. ()

வேறு.

அரிசியோடறுகுசாத்த லருக்கியம் பூவினாலே
பரிவுறக்கொடுத்தல்யாசு புண்ணியம் பலவுமுண்டாம்
விரிமலர்நீலமத்த யாமத்தில் விசேடமாகும்
பரிமளந் தோய்த்துமீசன் பதமலர்சாத்தலாமே. (சஉ)

சூரியனுக்கு வில்வமும், விநாயகர்க்குத் துளவமு
மாகாமைக்குக் காரணம்,

சூரியன்றினத்திலீசன் சூடலாற்சூரியற்கு
நேரிய வில்வமாகா வாயினவிருமலற்கு

நாரிதன் கொங்கைமேபோ னயத்தலாற் றுளபந்தன்னைச்
சீரியமுன்னோன் வேண்டான் சிவன்சொலச்செவியிற்கேட்டு.

சேவ்வந்திமலர்.

சாரமா முனிவனன்று சாத்துசெவ்வந்திப்பூவை
வாரமானுடனேகூட மண்மாரியுறையூர்ப் பெய்தச்
சேரமான் பரவலான செம்பியன் பட்டதன்மை
யாரமா வுரைக்கற்பாலா ரரன்சிராப் பள்ளிதன்னில். (சச)

தாழம்பூ.

திருமுடி கண்டேனென்று திசைமுகன் பொய்யுரைப்ப
விருமடி கரியாநிற்ப விருவர்க்குஞ் சாபமெய்த
வருமடியவர் கள்கைதை மலர்சிவன் முடியிற்சாத்தார் [வார்.
பெருமிடிவரினும் பொய்ச்சொற் பிதற்றிடார் பெரியோரா.

நந்தவனம் வைத்ததினுற் சிவத்துரோகந் தீர்ந்தமை. வேறு.

அந்தணனாலயத்திலரன் பூசைக்கேறு
மரம்பை நறுங் கனிவாங்கித் திவசஞ்செய்ய
வந்தபெரும் பாவத்தா னரக மெய்த
மறலியுடன் மாலயனு மறியோமையா
விந்தநரகிவ னெய்துங் காலமென்ன
விவன்கிளையி லொருவருமங் கின்மையாலே
நந்தவன முனியியற்றி நறும்பூச் சாத்த
நான்மறையோ னம்மலரா னரகந் தீர்ந்தான். (சரு)

வியாக்கிரபாதர்முதலியோர் பூவாலருச்சித்த முறைமை. வேறு.

சிறையளி புகுதாமுன்ஞ் சிறுகாலை யெழுந்திருந்து
பொறைமரம் வழுக்கா தேறப்புலி நகம் பெற்றுமந்த

கறைமலர்ப் பழுதுபார்க்க நகந்தொறுங் கண்படைத்துங்
குறைவறப் புரிந்தான்பூசை குயவரிப் பதத்தினனே. (சஎ)

கங்கையின் மிதந்த பூவைக் கழுவியே யருச்சித் தோனும்
வெங்கலின் மலரிட்டோனும் விழிமலர் சாத்தினோனு
மங்கையர் முலைமேற்கிள்ளித் தாம்பூலம்வைத்தோன்றானுஞ்
சங்கரற்கு கந்தவன் பாற்றலையினாற் சாத்தினோனும். (சஅ)

நினைவுவேறதலாகாதெனல்.

கொங்கலர் கொய்யும்போது கூர்விழிமையலாலே
பைந்தொடி மடவார் தம்மைப் பார்த்தலாற் கைலைவெற்பிற்
சுந்தரன் பட்ட காதையறிதிரே துணர்மென்போதா
லந்தணர் கீழ்களாவார் கீழ்களந்தணர்களாவார். (சகூ)

பெருக்கமா மலர்களேனும் பிஞ்ஞகன் பிரியங்கூரான்
சுருக்கமேயெனினுமையா தூய்மையே யணையுங்கண்டீ
ருருக்கமு மின்றிப்பூ வுமுதகமும் பழுதேயான
லருட்கணு முளவோ கண்ணி லருவருத்தி டுவனையன். (ரு0)

விரத்தர்தன்மை. வேறு,

ஆட்விரத்தி முதிர்ந்தவர்க ளருச்சனையுஞ் செயவேண்டிற்
பூமரத்தி னுதிர்ந்தமலர் புன்சருகுங் கொளற்பாலார்
மாமரத்தின் கோலொசித்து வாய்விளக்கவுங் கொள்ளார்
தாமொருத்தர் தரக்கொள்வர் தாவரங்கள் சலியாமே. (ருக)

மாவிளக்கிடுமுறைமை. வேறு.

தவறறப்பகலூணிக்கிச்சனிப்பிரதோடமாதல்
சிவநிசியாதல்வெண்டாமரையினூற்றிரியாற்றாண்டி

யவமறுசெஞ்சம்பாவினரிசியாவகலாப்பண்ணிக்
கபிலைநெய்கொண்டுதீபங்கண்டுளோர்கொண்டுளோரே. ()

உத்தமமொருமுந்நாழியொன்றரைநாழிநெய்தான்
மத்திமமதமந்தானுமற்றதிற்பாதிநெய்யாங்
கைத்திரியளவுகையிற்பருவிரற்கணிதமாகு
மத்திரியெரியுஞ்செந்தீயங்குலமாறிரண்டே. (௫௩)

நூல்செய்தோர்பெயரும், முதனூலும்,
நூற்பெயரும், நூற்பயனும்.

ஆர்புனைசடையோன்சைவவாகமங்களையாராய்ந்து
பேர்புனைகமலைஞானப்பிரகாசன்றமிழாற்சொன்ன
வேர்புனைதளஞ்சேர்புட்பவிதிமாலைப்படியேபாரிற்
சீர்புனைபூசைசெய்வோர்திருவருள்பெறுவர்தாமே. (௫௪)

புட்பவிதி முற்றுப்பெற்றது.

மெய்கண்டதேசிகன் திருவடிவாழ்க.



உ

சிவமயம்.

# * புட்பபலன்.

## நந்தவந மகிமை.

நந்தன வநத்திலீச னல்லுமை விநாயகன்முன்
கந்தரா தித்தராதிக் கடவுளர் முனிவர் சித்த
ரந்தமில் கணங்களாதி யானதே வதைகளெல்லா
மெந்தநா ளுஞ்சேர்ந்தங்கே யெளிதினி லிருந்து வாழ்வார்.

சிவன்றனக் கென்றுவைத்த திருநந்த வனத்தைப் பார்
த்தே, யுவந்துளோர் கூலிவேலை யுஞற்றினோ ரெல்லாஞ் செய்
தோர், நிவந்திடும் பலத்திற் பத்தி னீடுமோர் கூறடைந்தே,
தவந்தரு மறுபவத்தே தமதுபூ வனமே வைப்பார். (உ)

திருநந்த வநமேவைக்கச் சிந்தித்து மனையினின்று,
மொருமண்வெட் டியினைவாங்க வோரடி வெளியில் வைத்
தோ, ருருவந்த சென்மந்தன்னி லுற்றபா வங்களெல்லாம்,
பருவந்து தொலையுமென்றாற் பண்ணினோர்க் கென்ன சொல்
வாம். (௩)

பூவனஞ் செய்துளார்க்கப் பூவினாற் செய்தோர் பூசை,
மேவிய பலத்திற் பாதிவிரைந்தவுடந் திடும்விரும்பும், பூவ

* இது ஓர் பழைய ஏட்டுப்பிரதியினின்று கிடைத்தது. இதன் ஆசிரியர் பெயர் விளங்கவில்லை.

னத் தூற்றபூவிற் பொருந்திய யாவுமீசன், றாவருச் சனைக் கேயன்றித் தொடலாகா தொருவருக்கும். (ச)

நந்தவநமகிமை முற்றிற்று.

---

## கோட்டுப்பூவகை.

கோட்டுப்பூக் கொடிப்பூ நீர்ப்பூக் குலவிய நிலப்பூநான் காங், கோட்டுப்பூ வதனிற் கொன்றை கொடிப்பூவிற் றுளி யாகும், நீட்டுநீர்ப் பூவின்மேலாற் பலமாகு நிலப்பூத் தன்னி, ளூட்டிய தும்பைதானே நவிலதி லதிகமாகும் (ரு)

கொன்றையின் பூவிலொன்றைக் குளிர்மதி முடியோ ர்க் கேற்றி; னன்றிசேர் சிவலோகத்தி னண்ணுவ ரனந்தகா லம், பொன்றிக மிரண்டு மேற்றப் புகல்சாமீ பத்தில் வாழ்வா, ரொன்றிய சாரூபத்தி லொருமூன்றே நான்கே முத்தி. (சு)

செழுமலர்க் கொன்றைப்பூவைச் சிவன்றனக் கேற்றி னோர்க, ளழகம ருருவராகி யருளொடு பொருளுமார்ந் தே, பழையவல் வினைகள்போக்கிப் பத்திய ராகிப்பண்பார், விழைசிவ லோகத்தின்கண் மேவிமுன் முத்தி சேர்வார். ()

பவளக்கொன் றைப்பூவொன்றைப் பரமனுக்கேற்றினோர்க டவளக்கிம் புரிக்கோட்டானை தனிலேறித் தருநிழற்கே துவரவா யரம்பைமாதர் சூழவாழ்ந் தலகில் காலங் குவளைக்கந் தரத்தனூரிற் குலாவியே வதிவர்மாதோ. (அ)

செண்பக மலரிலொன்றைச் சிவனடிச் சேரச் சாத்தி னண்புடைப் பெண்கள்போக நாடொறும் புதிதாய் நண்ணி யெண்புவி மீதுமன்ன ரேறெனை விருந்துபின்னும் விண்பயின் மகவானுகி மேவுவ ரமேயபோகம். (கூ)

புன்னையின் பூவிலொன்றைப் புநிதனுக் கேற்றினோர்க
டன்னிக ரழகுமேவிச் சகமெலாந் தானையாளு
மன்னவ ராகிவாழ்ந்து மறுமையிற் சிவலோகத்திற்
றுன்னியாங் கிருந்துதானே சுத்தமா முத்திசேர்வார். (௧0)

குருந்தம்பூ வொன்றையீசன் குளிர்பத மலரிற்சாத்திற் றிருந்துபெண் போகமெல்லாந் திளைத்துவேள் பதத்திற்சேர்ந்தே, யிருந்துபொன் னுலகங்காக்கு மிந்திர னாகியென்றும், வருந்திய பாசநீக்கி மாசிலா முத்திசேர்வார். (௧௧)

மகிழம்பூ வொன்றைநம்பன் மலரடி யதனிற் சாத்திற், றிகழும்போ கங்களெல்லாஞ் சேர்ந்துவேள் பதத்திற்சென்றே. மகிழும்பெண் போகமார்ந்து மால்பத மருவிவாழ்ந்து புகழொன்றுஞ் சிவலோகத்திற் பொருந்தின்பம் பொருந்தி வாழ்வார். (௧௨)

மந்தாரை வெண்பூ வீசன் மலரடி மருவச்சாத்திற், சந்தான மீரெட்டாகச் சார்ந்துநற் போகமெய்திக், கொந்தாருந் தாரார்கூந்தற் கோதையர் விரும்பவாழ்ந்தே, யிந்தாருஞ் சடையினான்ற னிணையடி யெய்துவாரே. (௧௩)

செங்கழு நீர்மந்தாரைச் செழுங்குவ ளைப்பூநேரா, மங்கதின் பூவிலொன்றை யரன்றனக் கேற்றினோர்க, ளிங்கிருந்தெண்ணில்போக மெய்தியே யிமையோரேத்துஞ், செங்கண்மால் பதத்திற்சென்று சிவலோகஞ் சேர்ந்துவாழ்வார்.

கிண்கிணி மந்தரரைப்பூக் கெழுமியே சிவனுக்கேற்றி
லெண்ணரு மங்களெல்லா மெளிதினி லெய்திப்பின்னர்க்

கண்களி கூரமேவாக் கனலவன் பதமடைந்தே
தண்கருணையராய் மேலாஞ் சாலோகஞ் சார்ந்துவாழ்வார்.()

பாரிசாதப் பூவொன்றைப் பரமனுக் கேற்றினோர்கள்
சீரிய பொன்னுலோகஞ் சேர்ந்தயி ராணிபோக
மாரவே திளைத்துப்பின்ன ரயன்பத மணுகி வாழ்ந்தே
யேருலாஞ் சிவலோகத்தி லிருப்பர் முக் கற்பகாலம். (கசு)

பன்னியின் பூவிலொன்றைப பரமனுக் கேற்றினோர்க
டன்னிகர் காமலோகஞ் சார்ந்துபோ கங்களெல்லா
மன்னிய வுலகிலுள்ளோர் மதிக்கமன் னவர்களாகிக்
கன்னியோர் பாகன்கோயில் காதலாற் சேர்ந்துவாழ்வார். ()

பாதிரி வெண்பூவொன்றைப் பரமனுக் கேற்றினோர்கள்
சோதிசேர் வடிவராகித் தொல்லுல கெல்லாங்காத்து
மாதர்கள் சூழவாழ்ந்தே மறுமையின் மாதேவன்றன்
பாதபங் கயத்துச்சேர்ந்து பரமானந் தத்திலாழ்வார். (கஅ)

சிவந்தபா திரிப்பூவொன்றைச் சிவன்றனக் கேற்றினோர்கள்
பவந்தொலைந் தும்பர்கோவாய்ப் பலபோகந்துய்த்துப்பின்ன
ருவந்திடு மயன்பதத்தி லொருகற்ப மிருந்துமால்பா
னிவந்திடுங் கணங்களாகி நிலவுவர் சிவலோகத்தில். (சகூ)

குரவம்பூ வொன்றைச் செவ்வேற் குமரனுக் கேற்றி
னோர்கள், மரவஞ்செஞ் சாந்தபூசு மணிமுலை மாதர்சூழ,
விரவும்பல் பகலுமின்ப மிசைந்துவேள் பதத்திலெய்தி, யர
வம்பூண் டோன்சாரூப மனுதின மணுகி வாழ்வார். (உ0)

கோங்கம்பூ வொன்றை நம்பன் குளிர்மலர்த் தாளிற் சாத்தி
லோங்கு செல் வங்களெல்லா மூவந்தனு பவித்தேயாரும்

வாங்குந்தன் மையராயீந்தே வண்புக ழாளராகிப்
பாங்கம்பொன் னுலகிற்கோவாய்ப் பாவையர் சூழவாழ்வார்.

கேதகைப் பூவிலீசன் கிளர்முடி கண்டே னென்றவ்
வேதனுக் காகப்பொய்யை விளம்புத லாலேயென்று
நாதனுக் காகாதெங்க ளுயகி முதலாயார்க்கும் [வார்.
போதமுற் றணிந்தார் போதன் புரத்தினிற் பொருந்திவாழ்

செந்தாழைப் பூவைக்கந்தன் றிருமுடிக் கேற்றினோர்கள்
கொந்தாருங் குழலார் சூழக் குலாவிய போகமார்ந்தே
நந்தாருங் கரத்துமாய னல்லுல கதனினண்ணிச்
செந்தார்தங்கியபுயத்துச் செவ்வேள்பாற் சேர்ந்துவாழ்வார்.

ஆத்தியி னிலைபூவொன்றை யரனிணை யடியிற்சாத்திற்
பூத்திகழ் கற்பகத்தின பொன்மர நிழலிலெய்திச்
சீர்த்தியார் போகமார்ந்தே சிவலோகஞ் சேர்ந்துஞான
நீர்த்திகழ் சடிலனுலே நிலவிடம் பெற்று வாழ்வார். (உச)

கொன்றுத்திப் பூவையீசன் குளிர்பத மலரிற்சாத்திற்
கன்றுப்போ லன்புமேவிக் காமன தாணைதன்னை
வென்றோர்க்கு மேலாய்நல்ல விரத்தியாய்ப் பாவமெல்லாங்
கொன்றுத்தி முத்திகூடிக் குலவுபே ரின்பமார்வார். (உரு)

மஞ்சணுத் திப்பூவொன்றை மதிமுடி யோர்க்குச் சாத்தி
லஞ்சொலா ரரம்பைமாத ரளவிலாப் போகமார்ந்தே
கஞ்சமார் பிரமனுகிக் கற்பமொன் றற்குமாலா
யெஞ்சலில் போகமார்ந்தே யீசன துருவமாவார் (உசா)

பெருவாகைப் பூவையாடி பிறங்கிய பருவந்தன்னி
லுருவாரும் பரனுக்கேற்றி லுத்தியோ கித்ததெல்லாங்

திருவார வெற்றியாகுஞ் செய்தபா வங்கணீங்கு
மூருவாநற் சிவலோகத்தி லுறைந்தின்ப முறலாமன்றே. ()

குருக்கத்திக் கொழுந்தும்பூவுங் குலவுகே தாரநாதர்க்
குருக்கத்தா லிருபத்தோர்நா ளுவந்தருச் சனைபுரிந்தோர்
பெருக்கத்தா லுலகையாண்டு பின்புசா ரூபஞ்சார்ந்தே
திருக்கெலாந் தவிர்ந்துமுத்தி சேர்ந்துபே ரின்பமார்வார்.()

செருந்தியின் பூவிலொன்றைச் சிவன்றனக் கேற்றி னோர்கள், புரிந்தகா ரியங்களெல்லாம் பொலிவுடன் பொருந்திவாழ்ந்தே, யிருந்துபின் னேகாந்தத்தி லிந்திர விமானத் தேறி, விரிந்தபொன் னுலகின்மேவி மிக்கபோகங்க ளார் வார். (உகூ)

கோட்டுப்பூவகை முற்றிற்று.

## கொடிப்பூவகை.

தாளியின் பூவிலொன்றைச் சம்புவின் பதத்திற் சாத்தி
னீளுல கெல்லாங் காத்து நிலவுபோ கங்கடுய்த்தே
வாளைநேர் விழியின்மாதர் வாஞ்சிக்கும் படிவராகிக்
கோளகல் சிவலோகத்திற் குலவிவீற் றிருப்பர்தாமே. (௩0)

முல்லையின் பூவிலொன்றை முக்கணற் கேற்றினோர்கள்
மெல்லிய லார்கள்சூழ வேள்பத மேவிமேலா
நல்லபோ கங்கணண்ணி நாடெலா மதிக்கவாழ்ந்தே
யெல்லையி லாதமாத ரிணைமுலை யணைகுவாரே. (௩க)

கொடிமல்லி கைப்பூ வொன்றைக் குழகனுக் கேற்றி னோர்கள், வடிவமார் மாதரெல்லாம் வாஞ்சிக்கும் வடிவ

ராகி, நெடிதுகா லங்களெல்லா நேசமார் போகமார்ந்தே, கடிமலர்க் கற்பகத்தின் காவில்வீற் றிருப்பர்தாமே. (௩உ)

அடுக்குமல்லிகைப்பூவொன்றை யமலனுக் கேற்றினோர்கள், விடுக்கரும் பாவமெல்லாம் விட்டுவே ளினதுருபங், கடுக்குநல் வடிவராகிக் காசினி முழுதுங்காத்துக், கொடுக்கவேண்டியதெல்லாமுங் கொடுத்தயன் பதத்திற்சேர்வார்.

அனங்கமல் லிகைப்பூவொன்றை யரன்றனக் கேற்றினோர்கள், மனங்கவர் போகம்பாவும் மருவியே வையமெல்லா, மினங்களோ டினிதுகாத்தே யிருந்துபின் னிரதமேறிக், கனங்குழை மடவார்சூழக் காமவேள் பதத்திற்சேர்வார். ()

குடமல்லி கைப்பூவொன்றைக் கோலமால் விடையாற்கேற்றி, விடமல்கு வையமெல்லா மினிதினி லாண்டுவேண்டுங், திடமல்கு போகமெல்லாந் திளைத்துவேள் பதத்திலெய்தி, படன்மல்கு திருமாலாகி யரன்பதி யடைந்துவாழ்வார்.

இருவாட்சிப் பூவிலொன்றை யீசனுக் கேற்றினோர்கள்
கருவாட்சி யாகுஞ்சென்மக் கடலினைக் கடந்துஞானக்
குருவாற்பெற் றுலகுக்கெல்லாங் குருவாகி யெவர்க்குமின்ப
வுருவாக்கித் தாமுமுத்தி யுறுவரெல் லோருமுய்ய. (௩சு)

சங்கவர்த் தனத்தின்பூவைச் சங்கரிக் கேற்றினோர்கள்
குங்குமக் கொங்கைமாதர் குழுமியே சூழவாழ்ந்தே
யங்கவர் போகமெல்லா மார்ந்தபி னனங்கனுங்
மங்கலில் போகந்துய்த்து மருவுவர் சிவலோகத்தில். (௩எ)

பிச்சியின் பூவிலொன்றைப் பிறைமுடி யோர்க்குச்சாத்தி
னிச்சய மாகவேதா னிள்பத மேவியெல்லா

மிச்சையின் படியேபெற்றங் கிருந்துமால் பதமிசைந்தே
நச்சிய வெல்லாந்தோர்ந்து நவில்சிவ லோகஞ்சேர்வார். ()

வல்லிசா தப்பூவொன்றை மாதுமை யாளுக்கேத்தி
னல்லரு பத்தியோடு நாரியர் போகநண்ணி
வல்லவா றனுபவித்தே மன்மதன் பதத்தின் மன்னி
யெல்லையில போகமெல்லா மிசைந்துமை பதத்திருப்பார். ()

கோடிப்பூவகை முற்றிற்று.

---

## நீர்ப்பூவகை.

சிவந்ததா மரைப்பூவொன்றைச் சிவனடி சேரச்சாத்திற்
பவந்தவிர் பிரமகற்பம் பகர்சிவ லோகஞ்சேர்வார்
நிவந்தவெண் டாமரைப்பூ நிகழொன்று லருச்சித்தோர்க
டவந்தருஞ் சாமீபத்திற் சார்ந்துவாழ்ந் திருப்பர்தாமே. ()

ஆயிரந் தாமரைப்பூ வாயிர நாமஞ்சாத்தித்
தூய்நா தற்கணிந்தோர் துலங்குசா ரூபங்கற்ப
மாயகா லங்கள்சேர்வா ரமர்ந்தவெண் கமலமாதின்
மேயசா யுச்சியந்தான் மேவியே யின்பமார்வார். (சக)

செங்குவ ளைப்பூவொன்றைச் சிவன்றனக் கேற்றினோர்கள்
மங்கல வுருவராகி மங்கையர் சூழநாளுந்
தங்கிய போகமெல்லாஞ் சார்ந்தொரு கற்பகாலந்
துங்கமார் சாரூபத்திற் றுலங்கியே யிருந்துவாழ்வார். (சஉ)

கருங்குவ ளைப்பூவொன்றைக் கறைக்கண்டற் கேற்றினோர்க
ளொருங்குதங் கிளைகளோடு நேயமாம் போகமார்ந்தே
யிருந்தயி ராவதத்தி லேறியே மகவானாகிப்
பெருங்கயி லாயத்திற்போய்ப் பிரிவில்சா ரூபஞ்சேர்வார். ()

நெய்தலின் பூவிலொன்றை நிமலனுக் கேற்றினார்கள்
மெய்திகழ் சாலோகத்தின் மேவியாங் கிருந்துதானே
செய்தியார் ஞானமேவிச் சிவசாரூ பத்திற்சேர்ந்தே
நொய்தினி லின்பமார்ந்து நுவலரு முத்திசேர்வார். (சச)

சிவந்தவுற் பலத்தினாலே சிறப்புட னாயிரம்பூ
நிவந்திடு மாலையொன்றை நிறக்கவே செய்துநம்ப
னுவந்திடச் சாத்தினோர்க ளுலகெலாம் புரந்துபின்னர்ப்
பவந்தொலைத் தின்பமெய்திப் பரமமா முத்திசேர்வார். (சரு)

நீலவுற் பலத்தினாலே நிறுவவா யிரம்பூச்சேர்த்துக்
கோலமா மாலையொன்று குயிற்றியே சிவனுக்கேற்றிற்
சாலவும் போகந்துய்த்துச் சாரூபஞ் சார்ந்துபின்னர்க்
காலகன் மங்கடந்து கருதரு முத்திசேர்வார். (சசு)

ஆயிர நெய்தற்பூவை யாயிரந் தாமமாக்கி
யாயிர நாமத்தாலே யரன்றனை யருச்சித்தோர்க
ளாயிரங் கற்பகால மணிகொள்சா ரூபமெய்தி
யாயிர மறையினாலு மளப்பரு முத்திசேர்வார். (சஎ)

நீர்ப்பூவகை முற்றிற்று.

---

## நிலப்பூவகை.

தும்பையின் பூவிலொன்றைத் தோகையோர் பாகற்கேற்றி
லம்புயன் பதத்தின்மேவி யாயிரங் கற்பம்வாழ்ந்தே
செம்பது மக்கணன்சேர் சீருல கடைந்துபின்னர்ச்
சம்புவின் பதத்தின்மேவிச் சாயுச்சி யத்தைச்சேர்வார். ()

ஞாழலின் பூவிலொன்றை நம்பனுக் கேற்றினோர்கள்
கேழலின் வடிவுகொண்டோன் கிளருல கடைந்துவாழ்ந்தே

காழிலங் கியநற்கண்டன் கருதால குற்றுஞானச்
சூழலங் கேயடைந்து சொல்லொணு முத்திசேர்வார். (சகூ)

மேலான வெட்சிப்பூவை விமலனுக் கேற்றினேர்கள்
வேலோன்றன் பதத்தின்மேவி வேண்டிய வெல்லாந்தந்து
நூலாரு மலர்மாதூர னுவலரும் பண்கள்பாடக்
கோலாக லம்பொருந்திக் குவலயமன்னராவார். (ருo)

கொக்கித ழின்மந்தாரைக் குளிர்மல ரதனிலொன்றை
யக்கர வசைத்தநம்ப னடியிணை யதனிற்சாத்தின்
மிக்கபா வங்கணீங்கி வேண்டிய வெல்லாமெய்தித்
தக்கசா ரூபங்கற்பஞ் சார்ந்தபின் சார்வர் முத்தி. (ருக)

மாதளை யிலைகொழுந்து மலர்கள்கா யிவற்றையன்பான்
மாதொரு பாகற்கேற்றி மருவவே சாத்தினோர்க
ளாதவன் பதத்தின்மேவி யாயிரங் கற்பமார்ந்தே
சீதரன் பதத்திலெய்திச் சிவலோகஞ் சேர்ந்துவாழ்வார். ()

பட்டல ரிப்பூவொன்றைப் பரமனுக் கேற்றினோர்க
ளிட்டமார் போகமெல்லா மிசைந்துமன் னவர்களாகி
யட்டதிக் கோரும்போற்ற வவனியெல் லாம்புரந்தே
மட்டலர் குழலார்சூழ வாசவ னாகிவாழ்வார். (ருந)

அலரியின் செம்பூவொன்றை யரன்றனக் கேற்றினோர்கள்
பலவித போகமார்ந்து பார்முழு தாண்டுபின்னர்ச்
சலசநா யகன்பதத்திற் சார்ந்தபின் சிவலோகத்தி
னிலவியாங் கிருந்துதானே நீடுவர் பரமமுத்தி. (ருச)

அடுக்கல ரிப்பூவொன்றை யரன்றனக் கேற்றினோர்கள்
மிடுக்குடை மன்னராகி வேண்டிய தாண்டுபின்னர்

நடுக்கமின் மகவாகி நான்முகன் பதத்தின்மேவி
யிடுக்கணில் சிவலோகத்தி லிசைந்தின்ப மெய்துவாரே. ()

வெள்ளடுக் கலரிப்பூவை விமலனுக் கேற்றினோர்கள்
அள்ளலார் கலிசுலாவு மவனிமன் னவர்களாகிக்
கள்ளவாள் விழியார்மாதர் காதலாற் சூழ்ந்துமேவ
வுள்ளபோ கங்களார்ந்தே யோய்வில்சா ரூபஞ்சார்வார். ()

சங்குவெள் ளலரிப்பூவைச் சங்கரற் கேற்றினோர்கள்
குங்குமக் கொங்கைமாதர் குழுவெலாங் கூடிவாழ்ந்தே
யிங்குள போகமெல்லா மிசைந்துபின் னிமையோர்போற்ற
மங்கலில் சிவலோகத்தின் மருவிமா முத்திசேர்வார். (டுஎ)

கத்தூரி யலரிப்பூவைக் கருணையங் கடவுட்கேற்றில்
வித்தார மானவித்தை மேவிமே லவர்கள்போற்ற
முத்தார மொய்த்த கொங்கை மொய்குழன் மாதர்சூழ
நத்தாருங் கரத்தோனாக நாடருங் கதியிற் சேர்வார். (டுஅ)

குங்கும வலரிப்பூவைக் குளிர்மதி முடியோர்க்கேற்றி
லங்கண்மா ஞாலம்போற்று மரியசீர் வைகுந்தத்திற்
செங்கண்மா லாகிப்பின்னர்ச் சிவலோகஞ் சேர்ந்தேயென்றும்
பங்கமில் பாசநீங்கிப் பரமமா முத்திசேர்வார். (டுகூ)

செவ்வரத் தைப்பூவானைத் திருமுகற் கேற்றினோர்க
ளெவ்வரத் தைக்கேட்டாலு மெளிதினி லுதவுவான்பின்
மைவரைத் திருமாலூரில் வதிந்துபோ கங்கடுய்த்துப்
பவ்வமொத் திடுபூலோகம் பரிந்திடப் பண்ணுவானால். (சூ0)

சூரிய காந்தப்பூவைச் சூரியன் றனக்குச்சூட்டிற்
காரிய பாவமெல்லாங் கழித்தொளி வடிவமாகி

வாரிய றனத்துமாதர் வாஞ்சையான் மருவவாழ்ந்தே
யேரியல் சூரியன்ற னெழிற்பதத் திருப்பரன்றே. (கூக)

நந்தியா வர்த்தப்பூவை நவில்சிவ ராத்திரிக்கண்
ணுந்துநா லாஞ்சாமத்தி லுமையொரு பாகற்கேற்றிற்
பந்தமின் ஞானமேவிப் பரமமா முத்திசேர்வார்
சுந்தனஞ் சாத்தினோர்கள் சாரூபஞ் சார்ந்துவாழ்வார், ()

செவ்வந்திப் பூவையீசன் றிருமேனி தழையச்சாத்திற்
பவ்வஞ்சூ ழுலகமெல்லாம் பண்புடன் செங்கோலோச்சி
யெவ்வந்தீர் மன்னர்போற்ற வினியபோ கங்களெய்தித்
தெவ்வந்து பணியவாழ்ந்தே சிவலோக மதனிற்சார்வார். ()

வெள்ளெருக் கம்பூவீசன் விரைமலர்த் தாளிற்சாத்தி
லுள்ளபா வங்களெல்லா மொருவியே பருவமேவிக்
கள்ளவல் வினைகணீங்கிக் கருணையா லருளைமேவி
யெள்ளரும் பரமமுத்தி யிசைந்தென்று மினிதுவாழ்வார். ()

பட்டிவெண் பூவையீசன் பணிமலர்த் தாளிற்சாத்தி
லட்டசித் திகளுமேவி யாகாச மார்க்கமாக
வெட்டெனுந் திசையினும்ப ரெங்கணு மிசைந்துபின்னர்
வட்டவார் சடையரன்றன் மலரடி மன்னுவாரே. (கூரு)

மாணிக்கப் பட்டிப்பூவை மாதேவர்க் கேற்றினோர்க
ளாணிப்பொன் விமானத்தேறி யமரர்கோ னாகிவாழ்ந்தே
காணிக்கை யாகமாதர் கரத்தினின் மணிகளேந்திச்
சேணுற்ற சிவலோகத்திற் சென்றுசா ரூபஞ்சேர்வார். ()

பொன்னிற விரைப்பூவொன்றைப் புனிதனுக்கேற்றினோர்க
டன்னொரு சிவலோகத்திற் சார்ந்திருந் தனந்தகாலம்

பின்னர்ச்சற் குருவான்ஞானம் பெற்றுப்பே ரின்பமார்ந்தே
யன்னிறை கண்டன்றருளி லனுதின மடைந்துவாழ்வார். ()

மத்தைவெண் பூவையீசன் மணிமுடி யதனிற் சாத்தின்
மெத்துபோ கங்களார்ந்து வெறுத்துவீ டடைவான் வே
ண்டிச், சித்தமன் புருவமாகிச் சிவஞானங் குருவாற்பெற்று
நித்தமா னந்தமார்ந்தே நீடுவர் பரமமுத்தி. (கூஅ)

பொன்மத்தைப் பூவிலொன்றைப் புனிதனுக் கேற்றி
ஞோர்க, டன்மத்து மனத்தூயோராய்த் தரணியெல் லாம்புர
ந்து, கன்மத்தை நீக்கிஞானக் கருணையா தரவாற்பெற்றே,
சென்மத்தை நீக்கிக்கொண்டு சிவசாயுச் சியத்திற்சேர்வார்.

கருமத்தை யின்பூவீசன் கதிர்முடி யேற்றினோர்கள்
கருமத்தைத் துலைநேராதல் கண்டரு ளுருவாய் வந்தே
கருமத்தை வென்றுமாயை கழற்றியா ணவத்தைமாய்த்தே
கருமத்திற் றதிபோலுள்ளங் கருதுசற் குரவராவார். (எ0)

வழுதலைப் பூவைக்கன்னி மாதமுற் பக்கந்தன்னிற்
கெழுமுமட் டமிமுன்மூவேழ் கிளர்தினங் கேதாரத்தி
லழகுள நாதற்கேற்றி லாண்டிரு பத்தொன்றாகில்
விழைவன வெல்லாமிந்த மேயசென் மத்தின்மேவும். (எக)

எள்ளின்பூ வெண்ணெயெள்ளே யீசனுக் கேற்றினோர்க
ளுள்ளனபரற் சிங்கமாதத் துற்றிடும் பருவந்தன்னி
லெள்ளொன்று நிரம்பச்சாத்தி லெண்ணிய வெல்லாமெய்தி
யெள்ளும்பா வங்களெல்லா மிகந்துசா ரூபமெய்தும். (எ௨)

செம்பருத் திப்பஞ்சாலே,திகழமுன் னூலைச்செய்தே
நம்பனுக் கேற்றினோர்க ணான்முகன் பதத்தைநண்ணி

யும்பருக் குரியனாகி யுயர்சிவ லோகமுற்றே
நம்பனுக் கடியரோடு நண்ணிவீற் றிருப்பரன்றே. (எரு)

நிலப்பூவகை முற்றிற்று.

---

## வி ல் வ ப ல ன்.

வில்வமே புனிதமாகும் விளம்புவில் வத்தின் மிக்காம்
வில்வமுள் சத்தியாகும் வில்வத்தின் கோடுவேதம்
வில்வவேர் பதினோர்கோடி வியனுருத் திரரேயாகும்
வில்வமேத் துவர்க்கேதேவர் மெய்வடி வாகுமன்றே, ()

கூவிள மொன்றுசாத்திற் குலவுசா லோகமாகுங்
கூவிள மிரண்டுசாத்திற் குலவுசா மீபமாகுங்
கூவிள மூன்றுசாத்திற் குலவுசாரூபமாகுங்
கூவிள நான்கு சாத்திற் கூடுஞ்சா யுச்யந்தானே. (எரு)

வில்வமே நியமமாக விமலனுக் கணிவோர் வேறு
வில்வமில் லாதிருக்கின் மீளவுங் கழித்தேயந்த
வில்வமே கழுவிநீரான் மீளவுஞ் சாத்தலாகும்
வில்வமோர் திங்களன்றி மிக்கநாள் சாத்தலாகா. (எசு)

கூவிளம் பரனுக்கேற்றக் கூடிய புண்ணியத்திற்
கூவிளம் போலப்பொன்னாற் குயிற்றிடிற் பாதியாகுங்
கூவிள மிரசிதத்தாற் குயிற்றிடிற் பாதியாகும்
கூவிளம் வேறொன்றாலே குயிற்றிடி லதனிற்பாதி. (எஎ)

பீடிகை யொன்றிலேந்து பிறங்குவில் வங்கள்வைத்தே
யீடுசேர் நடுவில்வததோ டிசையவோர் துளபம்வைத்தே
நீடுவில் வச்சிவன்று ணிகழரித் துளபத்தேவி
கூடிவாழ் கின்றானென்று குலவிய சிந்தைசெய்தே. (எஅ)

உளந்தனிற் கூர்ந்தபூவை யுஞற்றியே பணிந்துசூழ்ந்தோர்
துளங்கலில் போகந்துய்த்துத் துலங்கிய விமானமேறிக்
கிளர்ந்திடு கோடிகோடிக் கிளையுடன் சிவலோகத்தில்
வளர்ந்திடும் போகமெல்லாமருவிமா முத்திசேர்வார். ()

வில்வமுங் கிளுவைதானும் விளாவும்வெண் ணொச்சிதானு
நல்லமா விலிங்கைதானு ஞாயிற்றுப் பருவந்தன்னின்
முல்லைமால் விடையான்பாத முளரியிற் கூடச்சாத்திற்
சொல்லொணு ஞானமேவுஞ் சொனுமிது பஞ்சவில்வம். ()

பன்னுமா தப்பிறப்புப் பகர்சோம வாரந்தானு
மன்னுமூ வைந்துநான்கும் வருபதி ஞன்குமெட்டும்
பின்னுமொன் பதுவுமான திதிகளும் பெருமைவில்வந்
தன்னைவந் தெடுக்கலாகா தெடுத்திடி னரகஞ்சார்வார். ()

வில்வபலன் முற்றிற்று.

---

## துளசி பலன்.

துளசியி னிலைபூவொன்றைத் தோகையோர் பாகற்கேற்றின்
வளமலி மால்பதத்தின் மருவவே வாழ்ந்திருந்தே
யிளமதி யணிந்தோன்பாங்க ரெழில்புனை சாரூபத்தி
லுளமகிழ் ஞானமேவி யுயர்பத முத்திசேர்வார். (அஉ)

கருந்துழாய் மாலுக்கேற்றிற் கலகவேல் விழியார்போக
மருந்திநான் முகனேயாகி யளவகல் போகமார்ந்தே
யிருந்துபின் வைகுந்தத்தி லிசைந்துமால் போலுருவம்
பொருந்தியா யிரங்கற்பங்கள் போனபின் புகழ்மாலாவார்,

திங்கண்முன் ஞெணம்வெள்ளி செவ்வாயா தித்தவார
மங்கிராக் காலேமாலே மன்னப ராணமெட்டுந்
தங்குபன் னிரண்டீரேழுஞ் சாற்றுமீ ருவாவினேடும்
புங்கமார் விதிபாதந்தான் புகழ்துழாய் கொய்யலாகா. ()

துளபநீள் கதிருமன்னுந் தூயபூ வலர்ந்தகாலேக்
கிளருநா ளோராதென்றுங்கெழுமிய விலேயிரண்டே
யளவிய கதிரெடுத்தே யரன்றனக் கணியலாகுங்
களிமதக் கரிமுகத்துக் கடவுளுக் காகாதன்றே. (அரு)

துளபமேழ் வாரங்காறுந் துலங்கவே சாத்தலாகுந்
துளபமோர் வருடங்காறுந் தூட்செய்து சாத்தலாகுங்[செய்
கிளருமுக் களேவில்வத்தை க்கெழுமவைத் துலர்த்தித் தூட்
தளவில்கா லங்களெல்லா மரன்றனக் கணியலாகும். (அரு)

தமனக மருக்கொழுந்தைத் தையலோர் பாகற்கேற்றிற்
சமமகல் செல்வமெல்லாஞ் சார்ந்துகா மன்பதத்திற்
கமலவாண் முகத்துமாதர் காதலாற் சூழவாழ்ந்தே
யிமையவர் சூழ்ந்துபோற்ற விந்திர ஞவரன்றே. (அஎ)

நாயுருவிக்கொழுந்து நற்கதி ரிலேசிவன்றன்
றாயபா தத்திற்சாத்திற் சொல்லிடுஞ் சாலோகாதி
யாயமுப் பதமுமேவி யரனரு ளதனுலாங்கே
தூயசித் துருவனுகி ச்சொல்லொணு முத்திசேர்வார். (அஅ)

பூளையின் கதிர்க்கொழுந்து புனிதனுக் கேற்றினேர்கள்
வேளினேங் கணையான்மேவும் விடயங்கண் மேவாதீசன்
றுளிலன் பாகப்பத்தி சார்ந்துஞா னம்பொருந்திக்
கோளகல் பரமானந்தங் குலவிவீற் றிருந்து வாழ்வார் ()

நொச்சியின் பத்திரம்பூ நோன்மைசேர் சிவனுக்கேற்றி
னச்சிய போகமெல்லா நண்ணியே சிவலோகத்தி
னிச்சைபா யிருந்துஞான மெய்திநம் மீசனாலே
மிச்சமாம் பரமமுத்தி மேவியின் புறுவரென்றும். (௬0)

கரந்தையி னிலையினொன்றைக் கணநாதற் கேற்றினோர்க [ப்
டிருந்துபூ லோகந்தன்னிற் செய்யகோல் செலுத்திப்பின்னர்
பொருந்திய சிவலோகத்திற் புகுந்துசா ரூபமெய்தி
யிருந்தூழி வாழ்ந்தே யீசன்றா ளிணையிற் சேர்வார் (௬௧)

செங்கீரை யிலையையீசன் றிருவடி யதனிற்சாத்திற்
கொங்காருங் கற்பகப்பூக் கொம்பினி லரசிருந்தே
யங்காரு மமரர்க்கெல்லா மதிபதி யாகிமீண்டே
யிங்காரும் போற்றமேவி யெழிலுடை யரசராவார். (௬௨)

மாசியின் பச்சைதன்னை மாசியின் மகத்துநம்பன்
வாசமார் மலர்ப்பதத்தின் மகிழ்வொடுஞ் சாத்தினோர்க
டேசமெல் லாம்புரக்குந் திறலுடை மன்னராகி
நேசமார் சிவலோகத்தி னீடூழி காலம் வாழ்வார். (௬௩)

மலைப்பச்சை யிலைகொழுந்து மருவிய கதிரிவற்றைத்
தலைப்படு மதியோற்கேற்றிற் சந்ததஞ் சிவலோகத்தி
னிலைப்பட விருந்துபின்னர் நேசமா ஞானமேவித்
துலைப்பில்சா யுச்சியத்திற் றுன்னியே யின்பஞ்சூழ்வார். ()

திருநீற்றுப் பச்சைதன்னைச் சிவன்றனக் கேற்றினோர்கள்
கருநீறு செய்துஞானங் காட்டுசற் குருவராகி
யொருநூறு யிரமாணுக்கர்க் குபதேச முதவிப்பின்னர்ப்
பெருஞான ரூபமேவிப் பேரின்ப நேயமார்வார் (௬௫)

எனுமிச்சம் பச்சைதன்னை யீசனுக் கேற்றினோர்கள்
பலமிச்ச மாகுமிம்மைப் பலனெலா மனுபவித்தே
யுலகுக்கு ளழகுளோரா யுயர்சிவ லோகமுற்றே
நலமிக்க சாமீபத்தி னண்ணுவ ரெண்ணில் காலம். (கூசு)

சமுத்திராப் பச்சைதன்னைச் சங்கரற் கேற்றினோர்கள்
சமத்தரா யுலகுக்கெல்லாந் தானுவா யழகுளோரா
யமைத்துணைப் பசுந்தோண்மாதரனைவர்தம் போகமார்ந்தே
யிமைத்தலில் லாவிண்ணோர்த மிறைவனா யிருந்து வாழ்வார்.

வளர்கதிர்ப் பச்சைதன்னை மாதேவற் கேற்றினோர்கள்
மிளிருமுற் பவத்திற்செய்த வினையெலாம் வீந்தேயேகுந்
தளர்வுறுந் துகட்கணங்கள் சார்தரா வளவில் செல்வம்
விழைவுறு கற்பகாலம் வியன்சிவ லோகமேவும். (கூஅ)

கொண்டைப்பூ வொன்றையீசன் குலவிய பதத்திற்சாத்திற்
பண்டைப்பாவங்களெல்லாம் பாறிடும் பழிகணீங்குங்
கண்டுற்ற மொழிபார்சூழக் கருதிய போகமார்ந்து
வண்டுற்ற கொன்றையான்றன் மலரடி மன்னுவாரே. (கூகூ)

குளிர்குடத் தன்குதம்பைக் கொழுந்துமார் கழிமாதத்திற்
கிளருமா றைந்துநாளுங் கெழுமிய பேரன்பாலே
யிளமுலை யுமையாள்பாக னிணையடி யதனிற்சாத்தி
னுளமலி ஞானமேவி யுறுவர்பே ரின்பவாரி. (க00)

வன்னியி னிலைகொழுந்து மாதேவர்க் கேற்றினோர்க
டன்னிகர் சிவலோகத்திற் சார்ந்துபோ கங்களார்ந்தே
யுன்னிய சாரூபத்தி லுற்றுயர் ஞானமேவித்
தன்னிக ரின்றியென்றுஞ் சார்வர்பே ரின்பவாரி. (க0க)

கிளுவைமுக் கனையீசன் கீர்த்திசேர் தாளிற்சாத்தி
லிளமுலை மடவார்போக மிசைந்துபின் வெறுத்தேயெல்லாந்
தளர்வற விரத்தனாகிச் சம்புவை யன்றிமற்றொன்
றுளபொரு டனைவிரும்பா துயர்சிவ ஞானஞ்சேர்வார். ()

மாவிலிங் கைப்பன்னத்தின் மருவுமுக் கிளைசிவன்றன்
சேவடி யதனிற்சாத்திற் சிறந்திடுங் கிளைமுவேழுந்
தாவிலாச் சிவலோகத்திற் சார்ந்துசா மீபந்தன்னிற்
சேவினனுமேலஞானஞ் சேர்ந்துபின் முத்திசேர்வார். (கOங)

விளவிலை கனிகாய்தம்மை விமலனுக் கேற்றினோர்க
ளுளமலி காதல்கூர்ந்தே யுலகெலா மொருகுடைக்கீழ்
வளமலி நிழலிலாண்டு மன்னவர் மதிக்கவாழ்ந்தே
யிளமுலை மடவார்சூழ விசைந்தின்ப மெய்துவாரே. (கOச)

சந்தனத் தருவரைத்த சாந்துசந் தனக்கொழுந்து
முந்துசித் திரைமாதத்தின் முற்பரு வத்துமுக்க
ணெந்தைபா தத்திற்சாத்தி லெழுமூன் று கலைமுறைகள்
வந்தபா வங்கண்மாய்த்து மருவுவர்சிவலோகத்தில். (கOரு)

மாந்தளிர் கனிகாய்பூவை வைகாசி விசாகநாளிற்
பாந்தளை யரையிலார்த்த பரமனுக் கேற்றினோர்கள்
கூர்ந்தபுந் தியராய்மேவிக் குலவிய வழகுள்ளோராய்ச்
சேர்ந்தசெல்வத்தினோராய்ச் சிவலோகஞ் சென்றுவாழ்வார்.

எனுமிச்சை யிலைகொழுந்தொன் றிசைந்திடுங் கனிகாய்பூவு
நலமுற்ற மாதந்தோறு நவில்பஞ்ச பருவநம்பன்
மலரொத்த பாதந்தன்னின் மகிழ்வொடுஞ் சாத்தினோர்கள்
சலசத்து மாதுநண்ணச் சகமுழு தாளுவாரே. (கOஎ)

நாரங்கத் திலேகொழுந்து நற்கனி பூவெந்நாளுஞ்
சாரங்க பாணிரெண்டு தாளின்மீ தன்பிற்சாத்தில்
வாரங்க ணற்றுவீழ வளரிள முலேயின்மாதர்
தாரங்க ளாகிமேவத் தரணியில் வாழ்வர்தாமே. (கoஅ)

நாவலங் கனிகொழுந்து ஞாயிற்றி னுத்திரத்திற்
சேவுயர் கொடியினுன்றன் சேவடி யதனிற்சாத்திற்
பூவில்வா ழயன்பதத்திற் பொருந்திமா போகநண்ணிப்
பாவல ராகியாரும் பரவவே பண்பில்வாழ்வார். (கoகூ)

அருச்சுனத் திலேகொழுந்தை யரன்றனக் கேற்றினுர்கள்
அருச்சுணன் சிலேத்தழும்பு மம்பிகை முலேத்தழும்புந்
தரித்தவ னுலகின்மேவிச் சாற்றுெ ஞானஞ்சார்வார்
விரித்தசெஞ் சடையான்றுள்கண் மேவுவார் பிறவிமேவார்.

நெல்லியின் காய்கொழுந்து நிலவுகார்த் திகைமாதத்திற்
சொல்லுமா தித்தவாரத் துலகநா யகனுக்கேற்றி
லெல்லேயில் பொசிப்பினுலு மெய்துபா வந்தவிர்த்தே
யல்லியங் கோதைபாக னமர்சிவ லோகமாள்வார். (ககக)

பேரிலங் தைக்கொழுந்தும் பேசிடுங் கன்னிமாதஞ்
சீரிய பூசநாளிற் சிவன்றனக் கேற்றினோர்க
ளேரிய வுலகமெல்லா மெளிதினி லாண்டுமாதர்
பூரண போகமார்ந்து பொருந்துவர் சாமீபத்தில். (ககஉ)

அகின்மர மதுபிளந்தே யரிந்திடுங் கட்டைதன்னேத்
திகழ்தரு குளிர்காலத்துச் செந்தழல் கொளுவியீசன்
மகிழ்தர முன்னேவைக்கின் மருவிடுஞ் செல்வமெல்லாம்
புகழ்புனே சிவலோகத்திற் பொருந்திவீற் றிருப்பர்தாமே.()

வருக்கையம் பலவின்மன்னும் வண்கனி மாவின்மேவித்
தருக்கிய கனியரம்பைத் தண்கனி யதுவேசாற்று
மருக்கொண்முக் கனியுங்கூட்டி மருவானிப் பருவந்தன்னி
லரற்குத விடிற்சாரூப மனுதின மமர்ந்துவாழ்வார். (ககச)

தமரத்தைக் கனியையானி சார்ந்தவுத் திரநாடன்னிற்
குமரற்குத் தந்தையான குழகனுக் கேற்றினோர்கள்
அமரர்க்குத் தலைவனாகி யளவில்போ கங்களார்ந்தே
சமமறச் சாமீபத்திற் சந்தத மிருந்துவாழ்வார். (ககரு)

பனைமரமொன்றுதன்னைப் பரன்முன்பு நாட்டிவைத்தே
வினைதவிர் விருச்சிகத்தின் மேவுகார்த் திகையிற்றீபந்
தனையதி லேற்றிவன்னி தழலெழச் சாத்தினோர்கண்
முனிவரா யிருந்துபின்னு முந்துசா மீபஞ்சார்வார். (ககசு)

புளியினின் பலத்தைநம்பன் புநிதமே னிதனிற்சாத்தி
லளியின மார்பூவாரு மளகமா ரரம்பைமாதர்
புளகிதக் கொங்கைபோகம் புணர்ந்துசா ரூபம்போந்தே
யுளமல மொருவியாரு முறலரு முத்திசேர்வார். (ககஎ)

கமார் நபழக்காய்கொத்துப் பொலிவுற வலங்கரித்தோர்
காகமே லணிந்தநம்ப னயந்திடு நிவேதனத்திற்
காகவே துவர்க்காய்நல்கு மாகமார் போகமெல்லா
மோகமா யருந்திப்பின்னர் முதுசிவ லோகஞ்சேர்வார். ()

துளசிபலன் முற்றிற்று.

---

## இளநீர் பலன்.

பச்சிள நீரையொன்று ப்ரமனுக் கேற்றினோர்க
ளுச்சித மானவித்தை யுடையரா யிருந்து பின்னர்

நச்சிய மீபோகமெல்லா நட்பொடு மனுபவித்தே
யெச்சமில் சாமீபத்தி லிருந்தின்ப மெய்திவாழ்வார். (கககூ)

செவ்விள நீரையீசன் றிருமேனிக் கேற்றினோர்கள்
அவ்விய மோவியோவா தளவில்செல் வங்களார்ந்தே
கொவ்வைவா யரம்பைமாதர் குழுவெலாஞ் சூழமேவி
நவ்விசேர் கரன்சாமீப நண்ணியே நாளும்வாழ்வார். (க௨0)

சூரிய கௌளியாகத் தோன்றிடு மிளநீர்தன்னை
நீரியல் சடையற்கேற்றி னீமூழி காலம்வாழ்ந்தே
விரிய மன்னராகி மிக்கபோ கங்களார்ந்தே
சீரிய சாரூபத்தைச் சேர்ந்தென்றுஞ் சிறந்துவாழ்வார். ()

சந்திர கௌளியாகச் சாற்றிடு மிளநீர்தன்னை
நந்திவா கனனுக்கேற்றி னாடொறுஞ் செல்வமார்ந்தே
பந்தபா சங்கணீங்கிப் பரஞான மருவிப்பற்றற்
றுந்துசா யுச்சியத்தை யொருவாமன் மருவுவாரே. (கக௨)

இன்னசந் திரகௌளிப்பே ரிளநீரை மாசிமாத
மன்னிய சிவநிசிக்கண் மருவிய சாமந்தோறும்
பன்னுமா யிரமதாகப் பரமனுக் காட்டினோர்க
டன்னிகர் ஞானமேவிச் சாயுச்சி யத்திற்சேர்வார். (க௨௩)

சகத்திர மானபச்சை தன்னிள நீரின்மிக்காம்
வகுத்தசெவ் விளநீரொன்றை மருவுமின் னதுமவ்வாறே
தொகுத்ததி லதிகமாகுஞ் சூரிய கௌளியொன்றை
மிகுத்தவா யிரமிதற்கு மிக்கது சந்திரகௌளி. (க௨௪)

இளநீர்பலன் முற்றிற்று.

---

## பொது.

பூங்கத லிப்பலத்தைப் புனிதனுக் கேற்றினோர்க
ளோங்கித் மன்னராகி யுலகெலாம் பரித்துவாழ்ந்தே
தேங்கமழ் கற்பகப்பூஞ் செழுநிழ லதனின்மேவி
யாங்குள போகமார்ந்தே யரனுரு வடைகுவாரே. (கஉரு)

பலவிதங் கதலிநல்கும் பலத்தினைப் பரனுக்கேற்றி
னுலகெலாம் பரித்துவாழ்ந்தே யுடையபுத் திரர்கடம்மைக்
குலவியே பெற்றுவாழ்ந்து கொண்டதோர் வடிவநீங்கி
யலகில்சீர்ச் சிவலோகத்தி லனுதின மமருவாரே. (கஉசா)

வாழையின் காயைநம்பன் மகிழ்தர நிவேதித்தோர்க
ளேழெனும் பவத்திற் செய்த விடர்ப்பவ மெல்லாநீங்கிக்
கேழில்சந் திரர்கண்மல்கக் கிலேசமில் லாதுபோக
மூழிதங் கிடநுகர்ந்தே யுயர்சிவ லோகஞ்சேர்வார். (கஉஎ)

கன்னிவா ழையினரீசன் கருணையார் திருமேனிக்கே
மன்னிய பூவினோடே மருவவே யேற்றினோர்கள்
பொன்னணி யாடையாதி பூச்சியம் பொருந்தவாழுந்
தன்னிகர் சாமீபத்திற் சந்ததஞ் சார்ந்தேவாழ்வார். (கஉஅ)

அரம்பையி னிலைகுருத்தை யரனிவே தனமருந்த
விரும்பியீந் திடுவோரென்றும் வேண்டிய போகமெல்லாம்
பொருந்தவே நுகர்ந்துபின்னர்ப் பொன்னுலகடைந்துமேலா
யிருந்துபோ கங்கண்மாந்தி யெழிற்சிவ லோகஞ்சேர்வார்.

நெற்பயி ரிலையையீச னீண்முடிக் கேற்றினோர்கள்
சொற்படு சென்மமொன்றிற் சூழ்ந்துள பாவநீங்கி

யெற்படு பரிதியாரு மெழிற்பத மெய்தியின்பங்
கற்பமொன் ருர்ந்துபின்னர்க் கயிலையஞ் சயிலஞ்சார்வார்.

வெண்பெருங் கருப்பஞ்சாற்றை விமலனுக் காட்டினோர்க
ணண்புடை யரிவைமாதர் நயமொடு நாளுஞ்சூழ
வெண்புவி முழுதுங்காத்தே யீசன துலகிலெய்திப்
பண்பொடு சாரூபத்திற் பதிந்தின்ப மருந்திவாழ்வார் (கா௲க)

செங்கருப் பஞ்சாறீசன் றிருமுடிக் காட்டினோர்க
ளங்கண்மா ஞாலமெல்லா மன்பொடு காத்துமேனி
மங்கல மாகப்போந்து வாழ்ந்துவா னுலகையாண்டே
செங்கண்மால் காணொணுத சிவபதஞ் சென்றுசேர்வார்." ()

ஆலையார் சிறுகரும்பை யமலனுக் கேற்றினோர்கள்
சாலவே பூலோகத்திற் சாற்றிய புருடனுகி
யேலவே போகமெல்லா மிசைந்தின்ப வார்த்தைபேசுஞ்
சீலரா யிருந்துபின்பு சிவபத மடைந்துவாழ்வார். (கா௲௩)

அறுகுழுவிலைக்கொழுந்தை யரன்றனக்கணிந்தோரென்றும்
பெறவரி தானபோகம் பெற்றுவாழ்ந் திருந்தபின்னர்
மறிமழுத் தரித்தோன்போல வடிவுடை யவராய்மன்னி
யுறுபொரு ளாகுமுத்தி யுற்றின்ப முறுவர்மாதோ. (கா௲௪)

சகலதே வருக்குநாணல் சார்ந்ததண் டருப்பைப்புல்லைத்
திகழவெம் பரனுக்கேற்றிற் செய்தபா வங்கடீரும்
புகழவே மருவுபோகம் பொருந்துநற் புத்திகூரு
மகமகிழ் சிவலோகத்தி லனுதின மமரலாகும். (கா௲௫)

வளர்ந்திடு முச்சிப்புல்லை வல்லையி லரைநாணுக்கி
யுளந்திக ழன்பினாலே யுமையொரு பாகற்கேற்றின்
கிளர்ந்திடும் பணிகள்பூண்டு கிலேசமற் றிருந்துவாழ்ந்தே
சளந்தவிர் சிவலோகத்திற் சார்ந்துவாழ் வார்கடாமே. ()

அரிந்திடுங் குச்சிப்புல்லை யரன்றிரு மேனியெங்குந்
தெரிந்திடச் சாத்தினோர்கள் சென்மநூற் றிற்செய்பாவந்
திரிந்திடு மறிவிற்பாறுந் திரிமலந் தேய்ந்துதேயும்
பருவர றீர்ந்துஞான பரபோக முறுவர்மாதோ. (கஙஎ)

மன்னிலா மிச்சைவேரின் மருவிட விசிறிசெய்தே
தன்னிகர் பரனுக்கீந்தோர் தக்கசெல் வங்கள்சார்ந்தே
யின்னிலந் தன்னின்மாத ரிச்சைகூர்ந் திடவிருந்தே
பொன்னுல கடைந்துபின்னர்ப் போதுவர் சிவலோகத்தில்.

இருவேலி வேரிலொன்றை யீசனுக் கேற்றினோர்க
டுருவாரு நிழலிற்சாருஞ் சகத்திர வக்கனாகி
யுருவாரு மரம்பைமாத ரொருவாம லுகந்துசூழப்
பெருவாழ்வு மேவிப்பின்னர்ப் பிரிவில்சா லோகஞ்சேர்வார்.

காய்மேலாம் பூவையெல்லாங் கமழித ழெலாம்பிரித்தே
சேய்மேலான் பாதம்போற்றிச் சிறந்திடச் சாத்தலாகுங்
காய்மேலா யிருந்தாலுந்தான் கன்னிகா ரத்தின்பூவே
யாமேலாங் காயைநீக்கி யணிதலாங் கமலப்போதே. (கசo)

சிவந்தன வெல்லாங்கோப்ஞ் சேரும்பொன்னிறப்பூவெல்லா
நிவந்திடும் போகமெய்து நிலவிய வெண்பூவெல்லாங்

தவந்தரு ஞானமேவுஞ் சாத்துவர் சாலோகாதி
யுவந்தமுப் பதமும்பெற்றே யுய்ந்திடு ஞானஞ்சேர்வார். ()

இன்னதன் மலர்களுந்தா னெவ்வித மலர்களேனுந்
துன்னிய வனத்திருந்தாற் சுத்தமா மிவற்றையெல்லாம்
பன்னகா பரணற்கேற்றிற் பாரின்ப போகந்துய்ந்தே
பொன்னுல கடைந்துபோகம் பொருந்தியே முத்திசேர்வார்.

செண்டுமுற் பணதியாவுஞ் சேர்த்தணி தலிற்சிறப்பா
மண்டிய மாலையெல்லா மற்றதி லதிகமாகு
மெண்டவிர் சரங்களெல்லா மிவற்றினு மதிகமாகு
மொண்டொடிபாகன்மீதி லொவ்வொன்று யணிதன்மிக்காம்.

அந்திட்டி யினிலோர்கன்ம மானதற் கலரியின்கண்
வந்திட்டு மருப்புகூடு மற்றதற் காகாதெல்லாங்
கொந்திட்டு மரும்பைக் கொய்தாற் சோலமார்சிவலிங்கத்தி
லந்திட்டு மிருப்பான்பேத மாக்கிய பேதமாகும். (கசச)

இவனுக்கே யென்றுவைத்த திருநந்த வனத்தெஞ்ஞான்று
பவமுற்று மரம்பூகாய்வேர் பத்திரம் பலனேர்ப்பட்டை
யவமுற்ற வறிவினாலு மறியாமை யாலுங்கொண்டோர்
கவலுற்ற நெஞ்சினோய்க் கனலெரி நரகிற் சேர்வார் ()

குருலிங்க வேடத்தோரைக் குறித்துவைத் திடும்பூவாதி
குருலிங்க வேடத்தோர்தாங் கொடுத்திடிற் கொள்ளலாகுங்
குருலிங்க வேடத் தோர்தங் கூருரி னின்றிக்கொண்டோ
ரெரிதங்கு நரகில்வீழ்ந்தே யிரவியுள் ளளவுமேறார். (கசரு)

ஆதலாற் பூவனத்தி லமர்ந்தது வெல்லாமீசன்
பாதபங் கயத்திலேறப் பண்ணிட வேண்டுமென்றே
யோதுமா கமங்களெல்லா முரவோர்களீதறிந்தே
நீதியா லன்பாற்போற்றி நிமலமா முத்திசேர்வார். (கசஎ)

விதியினு லுரைத்ததன்றி வேண்டிய தேதோவெல்லா
மதிகபத் தியினலீச னடியிணைக் கணியலாகும்
பதிபசு பாசந்தேர்ந்தோர் பகர்மொழி விதியேயாகுங்
கதிதரும் பாசநீங்குங் கழறுணு முத்திகாட்டும். (கசஅ)

புட்ப பலன் முற்றிற்று.



குன்மமொடு சுரந்தொழுநோய் பிறவும்வருத் திடினு மனங் குன்றுதென்றுந், தன்னுடையான் மார்த்தலிங்கந் தான்பூசித் திடுவதன்றி யயலார் தீண்டி, முன்னியருச் சனை செயுமென் றுரையார்தம் மனைவிநல முகந்தே யுண்ணென், றன்னியரைப் பொருந்தவிட்டுப் பார்ப்பாரோ பெரியரிது வதுவாமன்றே.

பொன்னம்பலம் நீடூழிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.



